அழகை, அண்மையிற் சென்று, அருகிலிருந்து நுகர விரும்பினான். அதனால், "பெண்ணே! உன் கையில் இருப்பது புட்டில் என்பதை நான் அறிவேன்; பார்த்த அளவிலேயே அது புலனாகிறது. நான் அறிய விரும்பியது அதையன்று; புட்டிலுள் இருப்பது யாது? அதைக் கூறு; அல்லது அதைச் சிறிது காட்டு," எனக் கூறியவாறே அவளருகில் சென்றுவிட்டான்.

"புட்டிலுள் இருப்பது யாது? அதைக் காட்டு," எனக் கேட்டவனுக்கு, அவள், அதைக் காட்டியதோடு நில்லாது, அவனோடு மேலும் சிறிது நாழிகை உரையாடி மகிழ வேண்டும் என்ற வேட்கை மிகுதியால், புட்டிலைக் காட்டியவாறே, "புட்டிலுள் இருக்கும் இம் முல்லை மலர்கள், நானும் என் தோழிமாரும் காட்டின்கண் பறித்தவை!" என்று அவன் வேண்டாத விளக்கத்தைத் தானே வலியக் கூறினாள்.

ஆயர்பாடித் தலைவன் மகள், தன்பால் வெறுப்போ, வீட்டிற்குப் போக வேண்டும் என்பதில் விரைவோ காட்டாது, தான் வினவிய வினாக்களுக்கெல்லாம் விடையளித்தும், தான் காண விரும்பியதைக் காட்டியும் நிற்கும் அவள் செயலால், அவள் காதற் கருத்தை அறிந்து கொண்ட இளைஞன், அவளை அடைந்து, அவள்பால் காதற் பயன் பெறத் துணிந்தான். ஆனால், அதை உரைக்க அவன் நாக்கு அஞ்சிற்று. அதனால், 'புட்டிலுள் இருப்பன முல்லை மலர்கள்,' என அவள் கூறியதும், "பெண்ணே! உன்பால் இருப்பதோ, மணத்திற்கேற்ற மங்கலப் பொருளாய முல்லை மலர்; அம்மலர்களோடு உன்னைக் கண்ட காலமோ, காதற் பயன் பெறுதற்கேற்ற மாலைக்

காலம்; இடமோ, ஒருவர் உருவை ஒருவர் காணாவாறு காரிருள் சூழ்ந்த, எவரும் எளிதில் புகமாட்டா அரிய இடம்!" எனத் தயங்கித் தயங்கித் தடுமாறித் தடுமாறிக் கூறினான். அந்த அளவு கூறியவன், "சூழ்நிலை கூட்டத்திற்கு ஏற்றது; அதைப் பெறத் துடிக்கிறது என் உள்ளம்!" என்பதைக் கூறமாட்டாது விழித்தான். விழித்தது மட்டுமன்று, அந்த அளவு கூறியதற்கும், அவள் என்ன நினைத்துக் கொள்வாளோ, அதனால் என்னென்ன ஏதங்கள் நேருமோ எனவும் அஞ்சிற்று அவன் உள்ளம். அதனால், "பெண்ணே! செல் எனச் சொல்லி, உன்னைப் போகவிட விரும்புகிறேன் நான். ஆனால் என் அறிவு உன்னைப் போகவிட மறுக்கிறது; தெளிவற்றது; பிறர் பெருமை உணராதது; குறைபாடுடையது; நல்லது தீதுகளை அறியும் திறம் அற்றது என்பதை அறிந்தும், அவ்வறிவிற்கு அடிமைப்பட்ட என் உள்ளமும் உன்னைப் போகவிடாது தடுத்து நிறுத்தி விட்டது!" என்று கூறித் தன் துணிவைப் பையப் பையத் தெரிவித்தான்.

"மாண உருக்கிய நன்பொன் மணி உறீஇப்
பேணித் துடைத்தன்ன மேனியாய்! கோங்கின்
முதிரா இள முகை ஒப்ப எதிரிய
தொய்யில் பொறித்த வனமுலையாய்! மற்றுநின்
கையது எவன்? மற்று உரை.

கையதை, சேரிக்கிழவன் மகளேன்யான்; மற்று இஃதோர்
மாதர்ப்புலைத்தி விலையாகச் செய்ததோர்
போழில் புனைந்த வரிப்புட்டில், புட்டிலுள் என்உள?
காணதக்காய்! எற்காட்டிக் காண்.

காண்இனி; தோட்டார்கதுப்பின் என் தோழியவரொடு
காட்டுச் சார்க்கொய்த சிறுமுல்லை, மற்றுஇவை
முல்லை இவை ஆயின், முற்றிய கூழையாய்!
எல்லிற்றுப் போழ்தாயின், ஈதோளிக் கண்டேனால்;
செல் என்று நின்னை விடுவேன் யான்; மற்று எனக்கு
மெல்லியது ஓரா அறிவு."

*தலைவன், தலைவியை வழியிடைக் கண்டு, அவள் கையின்கண் இருப்பது வினாவிச் சென்று சேர்ந்தின் புற்றது.*

1. மாண — மாட்சிமைப்பட, நன்றாக; உறீஇ — அழுத்தி, 2. துடைத்தன்ன — இழைத்த அணி போன்ற; 2 முதிரா — முற்றாத; முகை — அரும்பு ; எதிரிய — முளைத்த 4. பொறித்த — எழுதிய 5. எவன் — யாது; மற்று — வினைமாற்று; 6. கிழவன் — தலைவன்; 7. மாதர் — அழகிய; 8. போழில் — பனநாரினால்; புனைந்த — முடைந்த 9. எற்காட்டி — எனக்குக் காட்டி; 10. தோட்டார் கதுப்பு — தோடு ஆர் கதுப்பு — மலர் இதழ்கள் நிறைந்த கூழ்தல்; 11. காட்டுச்சார் — காட்டின்கண்; 12. முற்றிய — நீண்டு வளர்ந்த.

